13th March 1959]

SRI K. B. S. MANI : இம்மாதிரி வெளி நாட்டிலிருந்து ரெட் க்ராஸ் மூலமாகவும், ஹூதரன் மிஷின் மூலமாகவும், சப்ளை செய்வதற்குப் பால் பவுடர்கள் அனுப்புகிறார்கள். நல்ல முறையில் அவை விநியோகப்படுவதில்லை. அதை அரசாங்கம் கண்காணித்து, இப்படி துர்விநியோகம் செய்யப்படுவதைத் தடுக்க தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவை நல்ல முறையில் நல்ல சாதனங்களின் வழியாகத்தான் விநியோகிக்கப்படுகிறது. இரண்டொரு இடத்தில் துர்விநியோகம் ஆகிறது என்றால், இதர துறையில் நடப்பது போலத்தான் ஆகும் என்று நினைக்கிறேன்.

*Fishermen Co-operative Societies*

* 775 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) whether the Government have finalised their decision over the resolutions passed at the Fishermen Co-operative Societies Conference held at Kumbakonam on 28th February 1958 protesting against the amendment of G.O. No. 200, Development, dated 16th January 1950; and

(b) if not, the reasons for the delay?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) The Government have finalised their decision and have issued necessary orders directing the Collectors to lease the inland fisheries from the year 1959 onwards to the Fishermen Co-operative Societies on the average of the last two years, accepted bid amounts after examining the suitability and financial position of the societies.

(b) In view of the answer to question (a) this question does not arise.

*Lands brought under cultivation*

* 776 Q.—SRI V. SANKARAN : Will the Hon. the Minister for Home be pleased to state the extent of lands in holdings left uncultivated brought under cultivation in the Madurai district during the Second Five-Year Plan period under the Madras Land Utilization Order ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 180 acres.

*Dyeing and Designing Centre for Tiruvannamalai*

* 777 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) துணிகளுக்கு சாயமூட்டுதல், அச்சடித்தல் தொழிலை வடாற்காடு ஜில்லா, திருவண்ணாமலையில் ஆரம்பித்தாகிவிட்டதா ?

(ஆ) இல்லையென்றால், ஏன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) There is no such proposal with Government.

(b) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்திற்குள்—அதாவது 58-ம் ஆண்டிலே வடாற்காடு ஜில்லாவில் திருவண்ணாமலையில் சாயம் போடும் தொழிற்சாலை ஆரம்பிப்பதாக இருந்தது. அது போன்று இப்போது பிரபோசல் இல்லையென்று சொன்னால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்த அந்தத் திட்டம் நிறைவேற்றப்படாமல் கைவிடப்பட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த வருஷத்தில் இருக்கிற பிரபோசலைப் பற்றி நான் பதிலளித்தது. செய்யாறு திருவத்திபுரத்தில் ரூ. 7 ஆயிரம் காப்பிடல், ரூ. 13 ஆயிரம் ரெக்கரிங் ஆகக்கூடிய திட்டம் எடுத்துக்கொள்வதாக இருந்தது, நிதி இல்லாத காரணத்தினால் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : 58-வது ஆண்டிலேயே அது ஆரம்பிக்கப்படவேண்டுமென்று போடப்பட்ட திட்டம் அது. ஆகையால் அதை இந்த வருடத்திலாவது கண்டிப்பாக ஆரம்பிப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த வருஷத்தில் ஆரம்பிப்பதற்கு நிதி இல்லையென்று சொன்னேன். நிதி நிலைமையை ஒட்டித்தான் இது எல்லாம் கவனிக்கப்படும்.

*Nanjilnad Project*

* 778 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether, under the National Water-supply and Sanitation Project, Nanjilnad Project was included under the Second Five-Year Plan;

(*b*) if so, whether this Project was transferred to the Madras State with the reorganization of the States;

(*c*) what work was undertaken in Nanjilnad after 1st November 1956;

(*d*) what the total amount originally allotted was; and

(*e*) what the amount spent so far is?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The scheme was wound up by the erstwhile Travancore-Cochin State when drainage works were completed.

(*c*) The question of resuming and continuing the unimplemented part of the scheme is under consideration.

(*d*) Rs. 3 lakhs.

(*e*) The amount spent by the erstwhile Travancore-Cochin State on the works under this scheme was Rs. 50,000.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த திட்டத்திற்கு மூன்று லட்சம் ரூபாய் மதிப்பிட்டு, அதில் அந்த அரசாங்கமே 50 ஆயிரம் ரூபாய் செலவு செய்திருக்கிறது. அதன் பிறகு, அந்தப் பொறுப்பு நம்மிடத்தில் வந்த பிறகு என் கடந்த மூன்று வருஷ காலமாக அந்தத் திட்டத்தை எடுத்துக்கொள்ளாமல் காலதாமதம் செய்யப்பட்டு வந்திருக்கிறது என்று சொல்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தத் திட்டத்தில் டிரெய்னேஜ் மாத்திரம் 50 ஆயிரம் ரூபாய் செலவில் அவர்கள் பூர்த்தி செய்திருக்கிறார்கள். மற்றதை நாம் நடத்தவேண்டும். 56-ல்